# பொன் வண்டு

"நான் போட்ட கோலத்தை நீ திரும்பிக் கூடப் பார்க்கவே இல்லை. போ, அம்மா!" என்று சிணுங்கினாள் நிகிலா.

"இதோ வரேன்; அம்மா, பாய சத்தை இறக்கி வைத்துவிட்டு, அடுப்பை அணைத்துவிட்டு வருகிறேன்" என்று பொறுமையாகப் பதில் தந்தாள் செங்கமலம்.

நிகிலா தன் தாயை அன்புடன் நோக்கினாள்; இந்த ஆறு மாதத்தில் அவள் தாய் எலும்புக் கூடாக உருகி இருந்தாலும், லக்ஷ்மிகரமாகவே திகழ்ந்தாள். அடுப்படியில் நிற்கும் போது, நிகிலாவின் இதயம் எங்கோ சென்றது.

"வா, அம்மா. வந்து பாரேன்" என்று வற்புறுத்தினாள். ஒரு தோழியை அழைத்துச் செல்வதுபோல கையைப் பிடித்து தாயை வாயிற்புறம் இழுத்துச் சென்றாள்.

செங்கமலம் பெண்ணின் கைத்திறனை மெச்சியவாறு நின்றாள். தங்கள் வீட்டு முன் உள்ள பெரிய வெளியில் சாணம் தெளித்து, மெழுகி, முத்து முத்தாகக் கோலம் போட்டு, பெரிய மல்லிகைப் பந்தலைப் போலப் படர விட்டிருந்தாள் நிகிலா.

செங்கமலத்தின் உள்ளத்தைப் பிய்த்துக் கொண்டு ஒரு பெருமூச்சு வந்தது.

"ஏன், அம்மா? நான் எது சொன்னாலும் செய்தாலும் உன் முகம் மலரவே மலராதா? எதற்கும் ஒரு பெருமூச்சுத்தானா?" என்று கேட்டாள் மகள், தாழ்ந்த குரலில்.

"உள்ளம் மகிழ்கிறது, நிகிலா. முகத்தில் காட்டிக்கத் தெரியவில்லை - அவ்வளவுதான். இப்படி ஒரு கலையுள்ளம் உனக்கு இருக்கிறதே - அப்படீன்னு பெருமைப் படறேன். என் கண்ணே படுமோன்னு பயப்படறேன்.

"போ, அம்மா. உன் கண்படுமோ? உனக்கு எதைப் பார்த்தாலும் அப்பா நினைவு வந்து விடுவிடுகிறது. அதை மறைக்க பேசறே என்னவோ" என்றாள் நிகிலா நிதானமாக.

செங்கமலம் பேசவில்லை. ஆனால் அவள் தன் மகளை பார்த்த பார்வை...! 'உனக்கெப்படி இதெல்லாம் புரிகிறது?' என்று கேட்பது போல இருந்தது.

எனக்கு வயசாகலையா, அம்மா? மேலும்... என்று நிகிலா முகம் சிவக்கத் தலை குனிந்தாள்.

அப்பொழுது ஆர்ப்பாட்டத்துடன் ஒரு மோட்டார் சைக்கிள் அந்த விஸ்தாரமான கோலத்தின் மத்தியில் வந்துநின்றது. நிகிலாவின் அத்தை மகன் சிவகுமார் இறங்கி வந்தான்.

"வா, தம்பி!" என்று முகம் மலர அழைத்துக் கொண்டே உள்ளே சென்றாள் செங்கமலம். பெருமை யுடனும், ஆவலுடனும் அவனைப் பார்த்தபடியே நிகிலா வும் தாயைப் பின் தொடர்ந்தாள்.

கூடத்து ஊஞ்சலில் 'தொப்'பென்று அவன் அமர்ந்த வேகத்தில் ஊஞ்சல் பலகை அலங்கோலமாக ஆடி நின்றது.

நிகிலா ஊஞ்சல் சஞ்கிலியைப் பிடித்துக் கொண்டு நின்றாள். செங்கமலம் கையில் பாயசமும் வடையும் எடுத்துக் கொண்டு அங்கு வந்தாள்.

"உங்களை எங்க வீட்டுக்குச் சாப்பிட வரச் சொன்னாங்க" என்றான் சிவகுமார்.

"அதெப்படி, தம்பி? வீட்டிலேயே சமையல் முடிச்சுட்டேன். கோவிலிலே அபிஷேகத்துக்குக் கொடுத்திருக்கிறேன்" என்று செங்கமலம் பேசி முடிப்பதற்குள் சிவகுமார் குறுக்கிட்டான். "நீங்கள் செய்கிறகாரியம் ஒண்ணும் எனக்குப் பிடிக்கலை. இதென்ன கூத்து? மாமா எங்கே இருக்கிறார்னு யாருக்குத் தான் தெரியாது? நாளைக்குக் கூட கவியரங்கம் இருக் கிறது. அவர் அதிலே பங்கு கொள்ளப் போறாரு. நீங்க யாரை ஏமாத்தறதா எண்ணம்? நானும் இரண்டு வருஷமாக் காத்துக்கிட்டு இருக்கேன். தை பிறந்து விட்டது. எனக்கு வழி உண்டா, சொல்லுங்க. அதைக் கேட்கத்தான் வந்தேன்" என்றான் அவன் படபடப்பாக.

"சிவு, கொஞ்சம் பொறுமையாக இரு அப்பா. நான் சீக்கிரமே கல்யாணத்தை ஏற்பாடு செய்துடறேன்-எப்படியும் இந்த வருஷம் நடந்துவிடும்."

"போங்க அத்தை. எவன் தான் இத்தனை நாட்கள் காப்பானாம்? தை மாதம் மட்டும்தான் காப்பேன். நீங்கள் ஏற்பாடு செய்யலேன்னா நான் நிகிலாவைக் கூட்டிக் கிட்டுப்போய் பதிவுத் திருமணம் செய்து கொண்டு விடுவேன். அப்புறம் என் அம்மாவும் நீங்களும் உங்களை மதிக்கலேன்னு புலம்பவேண்டாம், சொல்லிட்டேன்."

"முறைப்படி யாருக்கும் குறையில்லாமல் நடக்கும், சிவு- எனக்காகப் பொறுமையாய் இரு" என்று கெஞ்சினாள் செங்கமலம்.

"பாயசத்தைச் சாப்பிடுங்க" என்று கெஞ்சினாள் நிகிலா.

அவளை விழுங்கி விடுவதுபோல ஒரு பார்வை பார்த்தான் சிவகுமார். பிறகு வடையைத் தின்று, பாயசத் தையும் பருகிவிட்டுக் கிளம்பினான். "வீட்டுப் படி ஏறாத ஒரு மனுஷனுக்குப் பாயசம் வச்சு விருந்து படைச்சிண்டு இருக்கிற பயித்தியம் உங்கள் அம்மாவாகத்தான் இருக்க முடியும். நம் கல்யாணம் ஆனால் நாமாவது காப்பாத் தலாம் அத்தையை..." என்று முணுமுணுத்துக் கொண்டே போய் விட்டான். பேரொலியைக் கிளப்பிக்கொண்டே மோட்டார் சைக்கிள் சென்று மறைந்தது.

நிகிலாவைப் பலவித உணர்ச்சிகள் மோதின. அவ்வளவு ஆத்திரத்திலும், 'இவளை நான் மணக்க மாட்டேன்' என்று பயமுறுத்தவில்லை தன் அத்தான் என்று நினைக்கும்போது அவளுக்கு பூரிப்பு மேலிட்டது. தான் தோன்றித்தனமாகத் திரியும் தகப்பனை நினைத் தால் சினம் பற்றி எரிந்தது, தாயின் பொறுமை கையாலாகத் தனமாகப்பட்டது, எரிச்சலை மூட்டியது.

சிவகுமார் போனபிறகு தன் தாயை அண்டிக் கேட்டாள். "நீ ஏன், அம்மா இப்படி மௌன சாமியாக இருக்கிறாய்? அப்பா வராவிட்டால் என்ன? அத்தை வீட்டில் ஒரு பகல் நடத்துகிறது?" என்றாள்.

"பணம் வேண்டாமா, கண்ணே? உங்கள் அப்பா வீடு வந்து ஆறு மாதமாகிறது. சொல்லி அனுப்பினாலும் வருவதில்லை. கடிதம் போட்டாலும் பதில் இல்லை. பாங்கியில் பணம் கட்டி வைப்பார். நான் வாங்கிக் கொள்வேன். இரண்டு மாதமாக 'செக்' அனுப்பினால் திரும்பி வருகிறது. நான் சேர்த்து வைத்து இருப்பது நம் சாப்பாட்டுக்குப் போதலாம். அதுவும் எத்தனை நாட்களுக்கு? கல்யாணம் நடத்த முடியுமா? அப்பா வந்தால் இந்த வீட்டை அடமானம் வைத்தாவது உன் கல்யாணத்தை நடத்தி விடுகிறேன், இன்று கோவிலுக்கு அபிஷேகத் துக்குப் போகிறேன். கடவுள் வழி காட்ட மாட்டாரா?" என்றாள் தாய், அமைதியாக.

பூஜை சாமான்களுடன் இருவரும் நடந்தே சென்றனர். வேலைக்காரியை நிறுத்தி ஒரு மாதமாயிற்று.

வழியில் கடையில் பூமாலை வாங்க அவர்கள் நின்றார்கள். அப்பொழுது செங்கமலத்தின் சிறு வயது தோழி ஒருத்தி அவளிடம் ரகசியமான குரலில் சேதி விசாரித்தாள். "செங்கு, உன் கணவர் உங்கள் வீட்டை நடிகை ரஞ்சிதகுமாரிக்கு எழுதி வச்சுட்டாராமே? ஊரே 'கொல்'லென்கிறதே?" என்று கேட்டாள்.

"போடி, அதை நம்புகிறாயா? அவர் ஒரு காலும் என்னை அந்த நிலையில் வைக்கமாட்டார்" என்று அடித்துக் கூறினாள் செங்கமலம்.

"பொய்தானே அந்தச் சேதி? நல்ல காலம்! நேற்று முதல் எனக்குத் தூக்கமே இல்லை. கவலைப்பட்டு தவித்து விட்டேன்."

எங்கிருந்து தான் செங்கமலத்தின் முகத்தில் அவ்வளவு ஒளி பொருந்திய புன் சிரிப்பு வந்ததோ? உறுதியான குரலில் அவள், "ஆமாம் அம்மா. வீண் வதந்தி" என்று கூறினாள்.

அந்த அம்மாள் நகர்ந்த பிறகு செங்கமலமும் நிகிலாவும் மீதி வழியையும் நடந்து சென்றனர். ஒருவரை ஒருவர் பார்க்க வில்லை.

முன் கோபுரத்தின் மதிலில் சுவரொட்டியைக் காட்டி னாள் பெண். "கவியரங்கத்திலே அப்பா தான் தலைமை போலத் தெரியுது? 'பொண்வண்டு' அவர்களின் தலைமை யில் என்று இருக்கிறது, பார்த்தாயா" என்று கேட்டாள்.

"இருக்கட்டுமே" என்றாள் செங்கமலம் சப்பிட்டக் குரலில்.

நிகிலா அதற்கு மேல் பேசவில்லை. இருவருமே மவுனமாகத் தெய்வத்தின் முன் நின்றனர். அபிஷே கத்தைக் கவனிக்கும் சாக்கில் இருவருமே ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளக்கூட இல்லை. தத்தம் சிந்தனை களில் ஆழ்ந்து விட்டனர்.

அபிஷேகம் முடிந்து அலங்காரமும் ஆயிற்று. ரோஜாப்பூ மாலைகளுடன் தெய்வச் சிலை அருள்காட்சி தந்தது.

அப்பொழுது அங்கே ஒரு பொன் வண்டு அந்தப் பூ மாலை மீது அமருவதும் ரீங்காரமிட்டுக் கொண்டு சிலையை வலம் வருவதுமாக இருந்தது.

நிகிலா ஓரக் கண்ணால் தன் தாயை நோக்கினாள். பொன் வண்டைக் கண்டதும் தன் தாய்க்கு வேதனை தோன்றுமே என்று அவள் மனம் துடித்தது.

செங்கமலத்தின் கண்களில் நீர் திரையிட்டது. பழைய நினைவுகள் அலைமோதி அவள் மனத்தில் பவனி வந்தன.

அவளுடைய திருமண தினத்தன்று மணமகனான ரவிகுமாரை பாடச் சொன்னார்கள். சொன்ன மாத்திரத்தில் அவன் ஒரு புதுக் கவிதை புனைந்து விட்டான். செங்கமலத்தைப் பார்த்து, 'வண்ணப்பூ நீ, வண்டினம் நான்' என்று பாடினானே? ஒரே கரகோஷம்.

அப்பொழுதெல்லாம் 'பொன் வண்'டின் கவிதை என்றால் அதற்குத் தனி மவுசு. ஏன், எப்பொழுதுந்தான். ஆனால் அன்று பண்பு இருந்தது, கௌரவம் இருந்தது, இன்றோ? பணம் இருந்தது மற்றவை எங்கோ?

செங்கமலம் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பழைய எண்ணங்களையே துடைத்துவிட எண்ணினாள் போலும். வண்டு சுற்றிச் சுற்றி வந்தது. விளக்கொளியில் பச்சை, நீலம், மஞ்சள் என்று 'டால்' அடித்தது. "ஆண்டவனே, என் இதயத்தில் குடியிருக்கும் 'பொன் வண்டு' உன்னைச் சுற்றியதாக அமையட்டும்" என்று அஞ்ஞானத்துடன் வேண்டிக் கொண்டாள் செங்கமலம்.

பிரசாதத்துடன் அவர்கள் வீடு திரும்பினார்கள். கண்ணைத் திறந்து உலகத்தையே பார்க்க விரும்பாதவள் போல செங்கமலம் கண்களை இறுக மூடிக் கொண்டு படுத்து விட்டாள்.

நிகிலாவும் ஓர் ஓரமாக அமர்ந்து கவலையுடன் பழைய கணக்குப் பார்த்தாள். முன்பு வெறும் கவிஞன் 'பொன் வண்'டாக இருந்த போது, தந்தை ரவிகுமாரின் கவிதைத் தொகுதிக்கு அரசாங்க கௌரவமும் ஐயாயிரம் ரூபாய் சன்மானமும் கிடைத்தன. செங்கமலமும்

ரவிகுமாரும் டில்லி சென்றார்கள். நிகிலா தன் அத்தை வீட்டில் இருந்து கொண்டு சிவகுமாருடன் ரேடியோவில் பரிசளிப்பு விழாவின் வர்ணனையை கேட்டதும், பெருமைப்பட்டதும் இன்று அந்த தந்தை எங்கோ தகாத தொடர்புகள் வைத்துக் கொண்டு கிடைத்தற்கரிய இசை ஞானத்தையும் கவிதைத் திறனையும் அற்பமான, இரு பொருள் படும்படியான பச்சையான கீதங்களைப் பாடுவதில் மூழ்கிவிட்டார். பூஜை பீடத்தில் இருந்த பாத்திரம் புழுதியில் உருண்டால் அதில் இன்னவிதமான குப்பைகள்தாம் அள்ளுவார்கள் என்ற நியதிதான் உண்டா? பணமும் வசதியும் பெருகின. பாசமும் பரிவும் மறைந்தன.

ஒரே ஒரு நாள் மட்டும் அவள் நினைவில் இன்று தீட்டிய சித்திரம் போல ஈரப் பசையுடன் ஒட்டிக் கொண்டது. அவள் அப்பொழுதுதான் வெளியிலிருந்து வீட்டுக்கு வந்தாள். அவள் வந்தது தெரியாமல் அவளுடைய பெற்றோர் உரக்கப் பேசிக் கொண்டிருந் தனர்.

ஒரு நாளும் அவள் காதுபட அவர்கள் வாதாடியோ சண்டை போட்டோ பார்த்திராத நிகிலாவுக்கு அது புதுமை யாக இருந்தது. ஒட்டுக் கேட்டாள் அவள்.

"பொன் வண்டு என்கிற பெயரே எனக்குப் பிடிக்க வில்லை. 'தேனி' என்று வைத்துக் கொள்ளுங்கள். அது தான் உழைத்து, தானும் உண்டு, மனித குலத்துக்கும் ஆண்டவன் ஆராதனைக்கும் தேன் கொடுக்கிறது. அல்லது 'பரிதி சேய்' என்று மாற்றிக்கொள்ளுங்களேன்" என்றாள் செங்கமலம்.

"நீ எதைச் சொல்லாமல் சொல்கிறாய் என்பது எனக்குப் புரிகிறது. நான் சினிமாவுக்குப் பாட்டு எழுதித் தருவது உனக்குப் பிடிக்க வில்லை. அதுதானே?"

"சினிமாவுக்கு எழுதினால் என்ன? நல்ல பக்தி நானிச் சொட்டச் சொட, நாட்டுப் பற்று மிளிர, மனிதாபி மானம் தொனிக்க, அறிவு நிறைந்த கீதங்கள் புனையக் கூடாதா?" என்று செங்கமலம் கேட்டாள்.

"ஓகோ, என் தமாஷ் பாட்டுக்களைச் சொல்கிறாயா? பொது ஜனங்கள் இலக்கிய சுவைக்காகச் சினிமாவுக்கு வருவதில்லை. பேரின்ப வாரிதியில் திளைக்க வருகிறார்களா? அன்றாடப் பாமர சுகத்துக்கும் சுவைக்கும் ஏற்ப ரசம் அவர்களுக்கு அளிக்க வேண்டும். 'நடு நடுவில் கொஞ்சம் தூவுங்கள்' என்கிறார் எங்கள் டைரக்டர்" என்று விளக்கிவிட்டு 'ஓ' வென்று சிரித்தார் தகப்பன்.

"தூவ வேண்டாம் என்று சொல்லுகிற டைரக்டருக்கு எழுதித் தருகிறது."

"படம் ஓடாது, பணம் குவியாது. உனக்கு எந்த மூலை தெரியும்."

"நமக்குத் தெரிந்தது போதும். சிறந்த கவிதைகள் எழுதிப் பேரும் புகழும் பெற்று விட்டீர்கள் அதுவே போதும். இந்தப் பங்களாவும் காரும் ஆடம்பரமும் வேண்டாம். நம்மிடம் இருக்கிற பணத்தைப் பாங்கியில் போட்டு விட்டு, வட்டி வாங்கிச் சாபிட்டால் கூட ஆயுளுக்குப் போதும்."

"போதும் உன் உபதேசம். 'பொன் வண்டு' என்றும் பொன் வண்டுதான். அதில் மயங்கி வந்து விழுவார்கள்."

"நிகிலா தன் பெற்றோர் இருக்கும் இடத்திற்குச் சென்றாள். ஒரு பட்டு புடவையைப் பிரித்துப் போட்டுக் காட்டிக் கொண்டிருந்தார் தகப்பன். தாய் கற்சிலை போல அமர்ந்திருந்தாள். அருகிலே ஒரு பாவாடையும் இருந்தது.

“நிகிலா குட்டி, இதைப் பார்த்தியா? பொன் வண்டு கலர் புடவை. உன் அம்மாவுக்கு இது. உனக்கும் ஒரு பாவாடை இதோ. உங்களுக்கு நிறம் எனக்குத் திறம்... எப்படி?” என்றார் தகப்பன்.

இன்று நினைத்துப் பார்க்கும்போதுதான் அன்று தன் தாய் ஏன் முகமலர்ச்சியின்றிக் கிடந்தாள் என்பது அவளுக்கு ஒருவாறு புரிந்தது. மனைவி சொல்வதற் கெல்லாம் செவி சாய்க்காமல், “பொன் வண்டு” தன் நிறத்தைக் கண்டு தானே மகிழ்ந்து, வேண்டாத மலர் களை நாடி. தெய்வமாக அளித்த தேனையும் எங்கோ சிந்த விட்டுக் கொண்டு பயங்கரக் காட்சி அளித்தது, இன்று நிகிலாவுக்குப் புரிந்தது,

நிகிலா எழுந்தாள். மயங்கிக் கிடந்த தாயை எழுப்பினாள். “வா, அம்மா. ஒரு பிடி சாப்பிடுவோம். சமையல் வீணாகிறது. கோவில் நைவேத்தியம் வேறு...”

தன் துக்கத்தையெல்லாம் எங்கு புதைத்து விட்டாளோ தெரியவில்லை. செங்கமலம் சிரித்த முகத் துடன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். “வா வா, சாப்பிடுவோம். வாழை இலை இரண்டு நறுக்கிக் கொண்டு வா”- என்றாள்.

இருவரும் எதை எதையோ நினைத்துச் சிரித்துச் சாப்பிட்டு விட்டு எழுந்தனர்.

வெற்றிலைப் பாக்குத் தட்டுடன் கூடத்தில் தரையில் அமர்ந்தாள் செங்கமலம். அப்போது யாரோ தடதட வென்று வாயிற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

நிகிலாவிற்குத் திறக்கவே பயம். அம்மாவின் தோழி சொன்னது போல... வீட்டின் புதிய சொந்தக்காரி ரஞ்சித் குமாரியோ? அவளுடைய ஆட்களோ?

"பயப்படாமல் திற" என்றாள் செங்கமலம் திடமாக.

பதட்டத்துடன் சென்று பெண் கதவைத் திறந்தாள். அங்கு நின்ற மனிதனைக் கண்டதும் ஒரு கணம் விழித்தாள். கதவை நன்றாகத் திறந்துவிட்டு, அவரைப் பார்க்க விரும்பாதவள் போல கதவையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

ஆறுமாத காலமாக வாயிற்படி ஏறாத தந்தை இப்பொழுது தள்ளாடித்தள்ளாடிக் கொண்டு உள்ளே வந்தார். முன் அறையில் உள்ள சோபாவில் 'தொப்' பென்று விழுந்து கண்ணை மூடிக் கொண்டார்.

அவரைக் கண்டதும் ஒருவித வெறுப்பு உருண்டை யாக வயிற்றிலிருந்து குமட்டிக் கொண்டு வந்தது நிகிலாவுக்கு. அவள் நேரே தன் தாயாரிடம் சொன்னாள். "அம்மா, அப்பாதான் வந்திருக்கிறார்" என்றாள்.

"எங்கே? எங்கே இருக்கிறாரா?" என்று கேட்டுக் கொண்டே பந்து போல எழும்பினாள் செங்கமலம்.

மகளின் உதடு ஏளனமாக மடிந்தது. "உன் பொன் வண்டு பக்தி ரசத்தை மாந்திப் பருகிவிட்டு போதையேறி, அருள் கூட்டில் இசைத் தேனை அடைக்கும் நிலையில் இல்லை. சாராய மதுவைத் தான் குடித்துவிட்டு அவல மாகக் கிடக்கிறது" என்றாள் அவள்.

"நிகிலா! இந்த மாதிரிப் பேசத்தான் நான் உனக்குக் கற்று கொடுத்திருக்கிறேனா?" என்று கடிந்தாள் தாய்.

நிகிலா வாயடைத்து விட்டாள். அந்தக் குரல் அவளை நொறுக்கி விட்டது. நெருங்கக் கூடாத யந்திர ஸ்தாபனத்தில் அடி எடுத்து வைத்துவிட்ட மாதிரி அதிர்ச்சியுண்டாள் நிகிலா.

அவளுடைய பெற்றோர்களின் அன்பு கோவிலின் கோபுரத்தைக் கூட மிதிக்கத் தனக்கு அனுமதியில்லை போல அவளுக்குத் தோன்றியது. உடனே அவளை ஒரு வித தனிமை ஆட்டியது. விசித்து அழுதுக் கொண்டே அவள் சுவர் ஓரமாக அமர்ந்து விட்டாள்.

பக்தனின் இதயத்திலிருந்து கிளம்பும் பிரார்த்த னையைப் போல செங்கமலம் குறிதவறாமல் நேரே தன் கணவனை அணுகினாள். அவரும் அவளை நாடி ஓடி வந்தார். உணர்ச்சி வசப்பட்டு செங்கமலம் மயங்கி கீழே விழுந்து விட்டாள்.

“நிகிலா குட்டி!” என்று இடி குரலில் அழைத்தார் தந்தை. தகப்பனும் மகளும் தண்ணீர் தெளித்து, விசிறி, செங்கமலத்தின் மயக்கத்தை தெளிய வைத்தார்கள்.

“போ, கொஞ்சம் காபி கொண்டு வா” என்று கட்டளையிட்டார் ரவிகுமார்.

நிகிலா சமையலறைக்குள் சென்று காபி தயாரித்துக் கொண்டு வந்தபோது அவள் பெற்றோர் இருவரும் கூடத்து ஊஞ்சலில் பக்கத்துப் பக்கத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நிகிலா சற்று தயங்கினாள்.

“வா, நிகிலா குட்டி. உன் எதிரே மானமிழந்து வாழ்ந்தவனுக்கு, உன் எதிரே பேச வெட்கமா? உன் அம்மா என்னை மன்னிப்பாள் என்று நான் நினைக்கவே யில்லைன்னு சொல்லிக் கொண்டிருந்தேன்” என்றார் தகப்பனார்.

“ஏன் அபசாரமான பேச்சு பேசறீங்க? வாங்க, இன்னிக்குத் தான் மகிழ்ச்சியான நாள். சாப்பிட வாங்க.”

“நான் எப்படி திரும்பி வந்தேன்னு நீங்கள் கேட்க வில்லையே?” என்று வினவிவிட்டு மனைவியையும் மகளையும் உன்னினார் ரவிகுமார்.

"உங்கள் வீட்டுக்கு நீங்க வர்றீங்க. அதைக் கேட்க நாங்கள் யார், அப்பா?" என்றாள் நிகிலா.

"அதுதானே?" என்றாள் அவள் தாய் உற்சாகமாக.

"எல்லாம் பழைய கதைதான். தேய்ஞ்சு போன பழைய கேடு கெட்ட பாதைதான். அங்கே ஏமாற்றம், உடனே வீடு திரும்ப வேண்டியதுதானே? இந்த வீட்டையும் பிடுங்கிக் கொண்டு விடுவாங்க போலத் தெரிஞ்சதும் தான் விழிச்சுண்டேன். உடனே அந்த உறவை அறுத்து எறிந்துவிட்டு ஓடி வந்துவிட்டேன்" என்று விளக்கினார் ரவிகுமார்.

என்ன பதில் சொல்வதென்று புரியாமல் இரு பெண்களும் பேசாமல் இருந்தனர்.

"பழைய 'பொன் வண்டு, இறந்து விட்டது, செங்கு. இனி 'தேனி' பிறந்து விட்டது. அது இந்தக் கமலத்தை விட்டு அகலாது" என்றார் ரவிகுமார்.

அப்பொழுதும் அவர்கள் இருவருக்கும் பேசத் தெரியவில்லை. அதே சமயம் தெருவிலிருந்து யாரோ வரும் சத்தம் கேட்டு மூவரும் திரும்பினார்கள்.

"நமஸ்காரம், மாமா. நீங்கள் இங்கே வந்திருக்கிறீங் கன்னு உங்க கார் டிரைவர் சொன்னான். காரை விட்டு விட்டு எதுக்கு நடந்தே வந்தீங்களாம்?" என்று சர்வ சாதாரணமாகக் கேட்டுக் கொண்டே, சிவகுமார் உள்ளே நுழைந்தான்.

"நாளை முதல் காரும் கிடையாது. இந்த மாளிகை யும் கிடையாது. சின்ன வீடு ஒன்று வாங்கிப் போட்டிருக் கிறேன். அதுக்குப் போகணும். இப்பவே பழகிக்கிறேன்."

"உங்க மருமகனைக் கேட்டீங்களா? பிருத்வி ராஜனைப் போலப் பெண்ணைக் கடத்திக் கிட்டுப் போய் விடவான் போல..." என்றாள் செங்கமலம்.

"என்ன செய்வது? இந்த மாதிரி தாய்க்கு ஒரு மகள் இருந்தால்...? மந்திரத்திலோ, தந்திரத்திலோ தள்ளிக் கொண்டு போக வேண்டியதுதான்" என்றான் சிவகுமார்.

"ஆமாம். அப்பா. நிகிலா மாதிரி பெண் கிடைக் கலாம். செங்கு மாதிரி மாமி கிடைக்க மாட்டா" என்றார் ரவிகுமார், உணர்ச்சிபூர்வமாக.

"என்ன, நீங்க!" என்று கடிந்தாள் செங்கமலம்.

"இந்தத் தையில்..." என்று ஆரம்பித்தான் சிவகுமார்.

கோவிலில் மணி 'டாண், டாண்' என்று அடித்து ஆமோதித்து ஆசி கூறியது.

**(அன்னை பூமி–1978)**

-----------